# கங்கா ஸ்நாநம்

"உஷ்! அப்பா!" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டு தரையில் அமர்ந்தாள் லக்ஷ்மி.

"அப்படி என்ன சாதித்து விட்டாயாம் நீ?" என்று கிண்டல் செய்தார், அவள் கணவர் தாமோதரன்.

"ஆமாம்! நீங்கள் தீபாவளிக்கு முதல் நாள் பெரிய கடைத்தெருவில் பட்டுப் புடவைக்கு மாடி ஏறி, நடந்து, சாமான்கள் வாங்கிக்கொண்டு, கூட்டுறவுக் கைத்தறிக் கடையில் துணிமணி வாங்கிப் பாருங்கோ. தெருவைக் கடப்பது ஒரு கண்டம்; அதன் பிறகு கடைக்காரர்களின் கவனத்தை ஈர்த்து நாம் கேட்கும் சாமானை வாங்குவது அதை விட ஒரு சாதனை!" என்று விவரித்தாள் மனைவி.

தாமோதரன் சிரித்தார். பிறகு ஜவுளிகளைப் பார்க்க அமர்ந்தார். அவர் பெண் வசுவும், பிள்ளை முரளியும் கூடச் சேர்ந்து கொண்டனர்.

"சம்பந்திகள் ஜவுளியைக் காட்டு" என்றார் தாமோதரன்.

லக்ஷ்மிக்கு மிகவும் பெருமை. புடவைகள், வேஷ்டிகள் யாவற்றையும் வகை வகையாக எடுத்து வைத்தாள் அவள். ஒரு கடையே பரப்பி வைத்துவிட்டாள். அதைப் பற்றி விஸ்தரித்துக் கொண்டே இருந்தபோது பாபு நுழைந்தான்.

"அவர்கள் எல்லாம் இன்னும் வரவில்லையா?" என்று அவன் கேட்டான்.

சட்டென்று யாருக்கும் பதில் சொல்ல நா எழ வில்லை. பாபுவின் முகத்திலும் வேதனையின் சாயல் படர்வதை தாமோதரன் கவனித்தார். அதனால்தான் உடனே அவனுக்கு விடையளிக்க முன்வந்தார். "இன்னும் வரவில்லை, பாபு. மத்தியானம் மூன்று மணிக்கு வருவார்கள், நீ எப்படி வந்தாய்?" என்று வினவினார்.

"பஸ்ஸில் தான். 'காலையிலேயே வந்து விடுவோம். நீயும் வா' என்று மாமா எழுதியிருந்தார்... அதுதான் நான் கிளம்பி..." என்று சொல்லித் தடுமாறினான் பாபு.

"இப்போ ஏது பஸ்?" என்று கேட்டார் தாமோதரன்.

"ஏதோ பஸ் பஸ்ஸாக மாறி ஒரு வழியாக வந்து சேர்ந்தேன்" என்றான் பாபு.

லக்ஷ்மி ஓரக்கண்ணால் தன் பெண் வசுவையும், பிள்ளை முரளியையும் ஒரு பார்வை பார்த்தாள். உடனே அவர்கள் வேஷ்டிகளையும் புடவைகளையும் அள்ளி எடுத்துக் கொண்டு உள்ளே போய் விட்டார்கள்.

"காபி சாப்பிட்டாயா? குளிக்கிறாயா? வெந்நீர் வேண்டுமா?" என்று தாமோதரன் உபசரித்தார்.

"காபி சாப்பிட்டு விட்டேன். குளிக்க வேண்டியது தான். பச்சைத் தண்ணீர் போதும்" என்று பதில் சொன்னவன், தன் கையிலிருந்த சிறு பெட்டியைத் தூக்கிக் கொண்டு வசுவும், முரளியும் சென்ற அறைக்குள் நுழைந்தான்.

லக்ஷ்மி ஜாடையாக தாமோதரனை பார்த்தாள். அவர் புரிந்து கொள்ளவில்லை போலும். பத்திரிகையைப் பிரித்து படிக்க ஆரம்பித்தார். லக்ஷ்மி முகத்தைச் சுளித்துக் கொண்டே அந்த அறைக்குள் நுழைந்தாள். பாபு தன் பெட்டியைத் திறந்து தான் உடுத்த வேண்டிய வேஷ்டி, துண்டு, சோப்பு எல்லாம் எடுத்துக் கொண்டு கிளம்பினான். "பாத்ரூம் எங்கே, மாமி?" என்று கேட்டான்.

"வா, காட்டுகிறேன்" என்று சொல்லிக்கொண்டே லக்ஷ்மி வழி காட்டினாள். போகும் வழியில் சமயலறைப் பக்கத்தில் ஒரு வெள்ளி டம்ளர் இருந்தது. அதைக் கையில் எடுத்துக்கொண்டாள் லக்ஷ்மி. பாபு அதைக் கவனித்தான்.

"உனக்குக் காபி கொண்டு வரேன், நீ குளித்து விட்டு வா" என்றாள் லக்ஷ்மி.

பாபு பின்புறம் போனான். லக்ஷ்மி அவசர அவசரமாக ஒரு முறை சமயலறைப் பாத்திரங்களைக் கணக்கு எடுத்துக் கொண்டாள். வசு சாவிக் கொத்துடன் அவளிடம் வந்தாள்.

"பத்திரம். நகை, நட்டு, கை கடியாரம் எல்லாம் கண்ட இடத்திலும் வைத்து விடாதீர்கள். டெரிலின் பாண்டு ஏதாவது வெளியே இருந்தால் மடித்து உள்ளே போடு. அப்புறம் வருத்தப்பட்டுப் பிரயோசனமில்லை" என்று லக்ஷ்மி பெண்ணை எச்சரித்தாள்.

"சரி, அம்மா" என்றாள் மகள்.

பாபு அடுத்த அறையில் தானே குளித்துக் கொண்டிருந்தான்? அவன் செவியில் எல்லாம் தெளிவாக விழுந்தது. அவன், தான் வருவது தெரிய வேண்டும் என்பதற்காகக் கனைத்துக் கொண்டே வெளியே வந்தான். அவன் எதிர்பார்த்தபடியே லக்ஷ்மி சிரித்த முகத்துடன் அவனை வரவேற்றாள். "பாபு, வா அப்பா. காபி சாப்பிடுகிறாயா? இங்கேயே உட்கார். நான் கொண்டு தருகிறேன். நீ இன்றைக்கு சம்பந்தி வீட்டுப் பிள்ளை" என்று உபசரித்தாள்.

பாபு காபியை வாங்கிக்கொண்டு அங்கேயே அமர்ந்து பருகிவிட்டுப் பாத்திரங்களைக் கழுவித் தருவதற்காக டபரா, டம்ளருடன் எழுந்தான்.

"ஊஹூம்! நீ அலம்பலாமோ?" என்று கூறியபடி வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு விட்டாள் லக்ஷ்மி.

பாபு முன்புறம் வந்தான். தன் தலை வாருவதற்குச் சீப்பு எடுக்கத் தன் பெட்டியைத் தேடி முன்புற அறைக்குள் போக எண்ணினான். ஆனால் அந்த அறை பூட்டிக் கிடந்தது. தாமோதரன் ஹாலில் அமர்ந்து பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார்.

"மாமா, தலைவார சீப்பு எடுக்கவேண்டும், ரூம் பூட்டி இருக்கிறது" என்றான் அவன், தயங்கியபடியே. அதற்குள் முரளி ஓடிவந்து, "இந்தாங்கோ சீப்பு, கண்ணாடியெல்லாம் இங்கே இருக்கிறது" என்று சொல்லி அவனுக்கு உதவி செய்தான்.

பாபுவின் கண்கள் பூட்டின அறையை ஒரு முறை பார்த்தது. தாமோதரன் அவனை அருகில் அழைத்தார். "சரி, சமாச்சாரம் சொல்லு. ஏதாவது வேலையில்

இருக்கிறாயா? உன் அப்பா எங்கே இருக்கிறார்?" என்று விசாரித்தார்.

"வேலை கிடைக்கவில்லை, சார். அப்பா கான்பூரில் தான் இருக்கிறார். அவர் எனக்குக் கடுதாசு கூட எழுதுவ தில்லை. தாய்க்குப்பின் தகப்பனும் தாயாதி என்பது எனக்குத்தான் உண்மையாக இருக்கிறது" என்றான் பாபு, எங்கோ பார்த்தபடி.

தாமோதரன் அவனையே சற்று உற்றுப் பார்த்தார். பிறகு "எந்த ஊருக்குப் போட்டாலும் போவாயா?" என்று கேட்டார்.

"எனக்கு ஊர் என்ன சார் கணக்கு? எவ்வளவு தள்ளியிருந்தாலும் அவ்வளவு நல்லது. என் கதை உங்களுக்குத் தெரிந்ததுதான்" என்றான் பாபு. அவன் குரலில் ஒரு கசப்பும், விரக்தியும் தொனித்தன.

தாமோதரன் எழுந்து விட்டார். "என்னோடு வா. ஓரிடத்திற்கு அழைத்துப் போகிறேன்" என்று அவனைக் கூப்பிட்டார்.

பாபுவும் ஒன்றும் பேசாமல் கிளம்பி விட்டான். தாமோதரன் அவனைத் தன் நண்பர் ஒருவர் வீட்டுக்கு அழைத்துப் போனார். அவனை வெளியே அமர்த்திவிட்டு உள்ளே போய்ப் பேசிவிட்டு வந்தார். அதன் பிறகு அந்த மனிதர் பாபுவை பலவாறும் கேள்விகள் கேட்டார். டில்லியில் அரசாங்கத்தில் பெரிய பதவி ஒன்றில் அவர் இருந்தாராம். அவருக்குக் கொஞ்சம் உடம்பு சரியாக இல்லாததால் சொந்தச் செலவில் ஒரு குமாஸ்தா தேடினாராம்.

"எனக்கு மருந்துகள் பார்த்துக் கொடுக்கவேண்டும். ஆகாரம் பார்த்துத் தயார் செய்ய வேண்டும். என்

துணிமணி கணக்கு வைக்கவேண்டும். எப்பொழுதும் என் கூடவே இருந்து பணிபுரிய வேண்டும். உன் மாதிரி எனக்குப் பிடித்தால் மத்திய அரசில் உனக்கு ஒரு நல்ல வேலை செய்து வைப்பேன். நல்ல பெயர் வாங்க வேண்டும்" என்று அவர் மிரட்டினார்.

"நீங்களே பாருங்கள்" என்று சுருக்கமாகப் பதில் சொன்னான் பாபு.

அதன் பிறகு தாமோதரன் பாபுவைக் கூட்டிக் கொண்டு சென்று அந்த ஊரில் உள்ள முக்கியமான இடங்களையெல்லாம் காட்டிவிட்டு, துணிக் கடைக்கு அழைத்துச் சென்றார். பாபு என்ன சொல்லியும் கேளாமல் அவன் அளவுக்கு ஒரு நல்ல உயர் ரகச் சட்டையும் ஒரு வேஷ்டியும் வாங்கித்தந்து வீட்டிற்கு அழைத்து வந்தார். 'நீ சம்பந்தி வீட்டுப் பையனடா இப்போ!" என்று சொல்லி அவனைத் தட்டிக் கொடுத்தார்.

அவர்கள் வீடு திரும்பினதும் புதியதாக வாங்கிய சட்டைத் துணிகளைக் கூடத்தில் வைத்துவிட்டுத் தாமோதரன் பின்புறம் போனார். பாபு தெருப்பக்கமே நின்று கொண்டிருந்தான்.

முன்பக்க அறையைத் திறந்து விட்டார்கள் போலும். குரல் கேட்டது. பாபு கவனித்தான். "என்னதான் இருந்தாலும் வசு, உங்கள் மாமனாருக்குக் கொஞ்சம் இங்கிதம் தெரியவேண்டும். தலை தீபாவளிக்கு இவன் என்ன முக்கியச் சம்பந்தி? ஒரு தரம் திருடிவிட்டு ஜெயிலிலே மூன்று மாசம் இருந்துவிட்டு வந்தவனுக்கு மறுபடியும் அந்தப் புத்தி வராதா?" என்று லக்ஷ்மி தன் பெண்ணிடம் கூறிக்கொண்டிருந்தாள். 'இவ்வளவு உரக்கப் பேச வேண்டுமா?' என்று நினைத்துக் கொண்டான் பாபு. வசு என்ன பதில் சொல்வாளோ என்று உற்றுக் கேட்டாள்.

"உரக்கப் பேசாதே, அம்மா, காதில் விழப்போகிறது. என் மாமனாருக்கு அவன்மீது பிராணன். அவனுடைய அம்மா இல்லாததனால்தான் இப்படியாகி விட்டான் என்று அவர் சொல்வார். கடுதாசு எழுதிப் போட்டு வரவழைத்து இருக்கிறார். இப்பல்லாம் அவன் தன் அப்பாகூட இல்லை தெரியுமா?" என்றாள் வசு.

"அப்பாதான் பிள்ளைதான். திருட்டுக் கை என்று தெரிந்த பிறகு எந்த அப்பாதான் கிட்டே சேர்ப்பார்? என்னவோ அம்மா உங்கள் மாமனார் கதைதான் அதிசய மாக இருக்கிறது!" என்றாள் லக்ஷ்மி.

அவர்கள் ஏதும் தொடர்ந்து பேசியிருப்பார்களோ என்னவோ-அதற்குள் தாமோதரன் வந்துவிட்டார். பாபுவும் உள்ளே வந்தான்.

அப்பொழுது ஒரு பையன் உள்ளே நுழைந்தான். "மாமி, எங்கள் அம்மா இந்த வெண்ணெய்யை உங்களிடம் கொடுக்கச் சொன்னாள்" என்று வெண்ணெய்ப் பொட்டலத்தை லக்ஷ்மியிடம் நீட்டினான். பாபுவை பார்த்துவிட்டு, "நேற்று இராத்திரி என்னோடு ரயிலில் வந்தது நீங்கள்தானே, சார்?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்றான் பாபு, சுருக்கமாக.

"நீங்கள் எனக்கு ஒத்தாசைப் பண்ண வில்லை யென்றால் என்னால் விழுப்புறத்திலே ஏறியே இருக்க முடியாது" என்று விவரித்தான் வந்தவன்.

அசிரத்தையாக சூள் கொட்டினான் பாபு. லக்ஷ்மி விடவில்லை... "ஏன், பாபு, இன்னிக்குக் காலையில் தான் பஸ்ஸிலே வந்தேன் என்றாயே?" என்று வெடுக்கென்று கேட்டு விட்டாள்.

பாபு சங்கோஜத்துடன் சிரித்தான். தாமோதரனைப் பார்த்துத்தான் பதில் சொன்னான். "நான் நேற்றேதான்

வந்துவிட்டேன், மாமா. என்னுடைய மாமாவும் மாமியும் இன்றைக்குக் காலைதானே வருவார்கள் என்று இன்று இங்கே வந்தேன். நேற்றே வரவில்லை என்று நீங்கள் கோபிப்பீர்களே என்று பயந்து..."

"பரவாயில்லை. அதனால் என்ன? நீ என்ன புது மனிதனா? நேரே நேற்றே வந்திருக்கலாம்" என்று சொல்லி தாமோதரன் அவனை ஆசுவாசப்படுத்தினார்.

"பொய்யும் புளுகும் பிறவிக்குணமாக்கும்" என்று லக்ஷ்மி எங்கோ தொலைவில் சொல்வது கேட்டது.

"பாபு, நீ சின்னவனாக இருக்கிறாய். எனக்கு ஒரு வேலை செய்யேன். முரளியைக் காணோம். அத்தோடு உன் மாமா, மாமி வர நேரமாகி விட்டது... அவர்களை வரவேற்க அவன் இருக்கட்டும்" என்று ஆரம்பித்தார் தாமோதரன்.

"என்ன, மாமா? சொல்லுங்கள்" என்று பதிலளித்த பாபு எழுந்து நின்றான்.

"பேங்கிலே போய் கொஞ்சம் ரூபாய் வாங்கிக் கொண்டு வா. செக் தருகிறேன்" என்றார் தாமோதரன்.

"முரளி வரட்டுமே, மாமா" என்றான் பாபு தயங்கிய படியே.

"சரி, நானே பார்த்துக்கொள்கிறேன். நீ சம்பந்தி வீட்டுப் பையனல்லவா- எனக்கு வேலை செய்யலாமா?" என்று சட்டென்று கோபித்துக்கொண்டார் தாமோதரன்.

"நீங்கள் தவறாக நினைக்கக்கூடாது, மாமா. எனக்கு பேங்க் தெரியாது. பேங்க்கிலே என்னைத் தெரியாது..."

"நான்தான் இத்தனை நேரம் ஊரைச் சுற்றிக் காட்டவில்லையா?" என்று கடிந்து கேட்டார் பெரியவர்.

"சரி, மாமா. கொடுங்கள்" என்றான் பாபு.

தாமோதரன் செக் எழுதிக் கொடுத்தார். பாபு கிளம்பிப் போய் அவர் சொன்னபடியே ரூபாய் வாங்கி வந்தான்.

"எண்ணிப்பார்" என்றார் அவர்.

அவன் அவ்வாறே செய்துவிட்டுப் பணத்தை அவரிடம் நீட்டினான்.

"சரி, உன் சட்டைப் பையிலேயே இருக்கட்டும். எனக்கு வேணுங்கிறபோதெல்லாம் கொடுத்துவிட்டுக் கணக்கு எழுது. இந்தா கடுதாசு. இது என் பேனா, பத்திரம்" என்றார் தாமோதரன்.

பாபு நடுங்கும் கைகளுடன் அவைகளைப் பெற்றுக் கொண்டான்.

"என்னடா கிழவன் மாதிரி நடுக்கம்?" என்று அதட்டலாகப் பேசினார் தாமோதரன்.

பாபு அசடு வழியச் சிரித்தான். அவன் கடைக் கண்ணால் வீட்டை ஒரு பார்வை பார்த்தான். வசு பீதியடைந்த கண்களுடன் ஒரு பார்வை தன் தகப்பனார் மீது வீசிவிட்டு வேகமாக மறைந்தாள்.

பாபு ரூபாயைத் பத்திரமாகத் தன் சட்டைப் பையில் வைத்துக் கொண்டான். தெருவில் டாக்ஸி வரும் சத்தம் கேட்டு இருவரும் போனார்கள். முரளி சம்பந்திகளுடன் வந்து இறங்கினான்.

"முரளி, நீ எப்படிடா சரியாகப் போனாய்!" என்று வியப்போடு கேட்டார் அவன் தந்தை.

"நான் கொஞ்ச நாழிகையாகவே பஸ்ஸடியில் காத்திருந்தேன்" என்றான் முரளி.

சம்பந்திகளை வரவேற்பதில் வீடே கலகலப்பாகி விட்டது. வசுவும் தன் கணவனைப் பார்த்த குதூகலத்தில் மானாகப் பறந்து வேலைகள் செய்தாள்.

"உங்கள் பாபு உங்கள் பிரதிநிதியாக சம்பந்தியாக வந்தான். நான் அவனை என் கைத்தடியாகச் சுவிகரித்துக் கொண்டு விட்டேன்" என்றார் தாமோதரன்.

"ஏன்?" என்றார் சம்பந்தி, புரியாமல்.

"எனக்கு வயசாகி விட்டதல்லவா? என் நச்சுப் பேச்சைக் கேட்கவும், நான் ஏவின வேலையைச் செய்யவும் ஒரு சின்னப் பையன் தேவையாக இருக்கிறது. எனக்கு ஒத்தாசையாக இருக்கிறான். இன்று அவன் எங்கள் வீட்டுப் பிள்ளை தான், சம்பந்தி இல்லை" என்றார் தாமோதரன்.

"சரி, நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்" என்று சிரித்தார் சம்பந்தியும், பெருமையுடன் மருமகனைப் பார்த்து. ஆனால் அவர் மனைவியின் முகம் கவலையுடன் வாடியது. வசுவின் கணவன் அதைக் கவனித்தான் போலும்.

"அதெப்படி முடியும்? அவன் எங்களோடு மரியாதைகள் உபசரணைகள் பெற வேண்டுமென்றுதான் அப்பா கடுதாசு போட்டு வரவழைத்தார். அவன் சம்பந்தியாகவே இருக்கட்டும். ஒரு பொறுப்பும் அவனிடம் கொடுக்கவேண்டாம்" என்றான் மாப்பிள்ளை, பூடகமாக.

"சுவீகரித்த சொத்தை நான் விடமாட்டேன்" என்றார் தாமோதரன். அப்பொழுது பேச்சு அத்துடன் நின்றது.

மாலை நேரமானதும் தெருவில் மத்தாப்புக்களின் ஒளியும் வெடிகளின் ஓசையும் அவர்களைத் தெருப்பக்கம் இழுத்தன.

லக்ஷ்மி இரவு விருந்து சமைப்பதில் ஈடுபட்டாள். வசு மட்டும் தன் தாய்க்கு உதவி செய்வதும், சிறிது நேரம் தெருவில் வந்து நிற்பதுமாக இருந்தாள். சம்பந்தி தம்பதிகள் உள்ளூர்க் கோயிலைப் பார்ப்பதற்காக் கிளம்பி விட்டார்கள்.

"பாபு அடுத்த வீட்டுக் குழந்தைகளைக் கூப்பிடுடா, மத்தாப்பு, சட்டி வாணம் எல்லாம் கொடுப்போம். நம் வீட்டு வாசலில் விடட்டும்" என்றார் தாமோதரன்.

பல குழந்தைகள் வந்துவிட்டன. ஒரே அமளி. சம்பந்திகள் திரும்பிவந்து காத்துக் கொண்டிருக்கிறார்களே என்று லக்ஷ்மி வற்புறுத்தின பிறகுதான் தாமோதரன் உள்ளே வந்தார்.

விருந்து சாப்பாடு முடிந்து ஆண்பிள்களை வெற்றிலை போட்டுக்கொண்டு முன் ஹாலில் அமர்ந்தனர். பெண்கள் பின்கட்டில் சாப்பிட்டனர்.

அதன் பிறகு லக்ஷ்மி ஒரு எவர்ஸில்வர் டிபன் செட்டை எடுத்துக்கொண்டு வந்தாள். "முரளி, இந்தப் பட்சணத்தை உங்கள் அப்பா சிநேகிதர் டில்லியிலிருந்து வந்திருக்கிறாரே-அவர்கள் வீட்டிலே கொண்டு கொடுடா" என்றாள்.

"பாபு நான் உன்னைக் கூட்டிக்கொண்டு போனே னேடா? அவர் வீடுதான். போய்க் கொண்டு கொடுத்து விட்டு வா!' என்று பணித்தார் தாமோதரன்.

லக்ஷ்மி தயங்கினாள். வசு விழித்தாள். பாபுவின் மாமா சட்டென்று ஒரு புத்தகத்தை எடுத்துப் படிக்க ஆரம்பித்தார். வசுவின் கணவன் காலண்டரில் என்னவோ தேடினான். அவன் தாய் வெற்றிலையைத் துண்டில் தேய்த்துத் தேய்த்துத் துடைத்து நரம்பு நரம்பாகக் கீறி தாம்பூலம் தரித்தாள்.

"கொடுங்கோ, மாமி" என்று கேட்டு வாங்கி பாபு விரைவாக வெளியே சென்று மறைந்தான். அவன் சென்ற பிறகு யாருமே பேசவில்லை.

கொஞ்ச நேரம் எதிலும் பிடிப்பில்லாமல் பேசிவிட்டு அவரவர்களும் படுக்கப் போய்விட்டார்கள்.

வெகு நேரமாகியும் பாபு திரும்பி வரவே இல்லை. தாமோதரன் வெளித் தாழ்வாரத்தில் படுத்திருந்தார்.

லக்ஷ்மி மெதுவாக வந்து எட்டிப் பார்த்தாள். "பாபு வரவில்லை, கதவு போடணுமே" என்று கேட்டாள் மெதுவாக.

"கதவைப் போட்டுக்கொண்டு நீங்கள் படுத்துக் கொள்ளுங்கள். ஒரு தலையணையும் ஜமுக்காளமும் இங்கே போடு. அவன் வந்தால் இங்கே என்னோடு படுப்பான்" என்றார் கணவன்.

லக்ஷ்மி அவர் சொன்னபடியே செய்துவிட்டுப் போய் விட்டாள்.

மூன்று மணிக்கெல்லாம் லக்ஷ்மி விழித்துக்கொண்டு வெந்நீர்போட்டாள். பிறகு தெருவில் ஒரு பட்டாசுக் கட்டைக் கொளுத்திப் போட்டாள். தாமோதரனும் மற்றவர் களும் விழித்துக் கொண்டார்கள்.

"பாபு வரவே இல்லையா?" என்று லக்ஷ்மி ஒரு கேள்வி கேட்டாள். தாமோதரன் அவளைப் பார்த்த பார்வையினால் பேசாமல் வேலையைப் பார்க்கப் போய் விட்டாள்.

"மங்கள ஸ்நானம் செய்யுங்கள்" என்று தாமோதரன் துரிதப்படுத்தினார்.

"பாபு எங்கே?" என்று சம்பந்தி கேட்டார்.

தாமோதரன் பதிலே சொல்லவில்லை. பட்டாசு கொளுத்தத் தெருப் பக்கம் போய்விட்டார்.

லக்ஷ்மி முறைப்படி எல்லாம் செய்ய, முதலில் வசுவும் மாப்பிள்ளையும் மணையில் அமர்ந்து எண்ணெய் தேய்த்துக் கொண்டார்கள். அதன் பிறகு முரளி, அதன் பிறகு சம்பந்திகள்.

லக்ஷ்மி இதனிடையில் போய் ஸ்நானம் செய்து விட்டு வந்து விட்டாள். காபி கலந்து வந்தாள். தாமோ தரன் மட்டும் தெருவில் அமர்ந்து குழந்தை மாதிரி பாணங் களை விட்டுக் கொண்டிருந்தார்.

"காபி சாப்பிடுங்கோ. இந்தப் பிள்ளையைக் காணாமே இன்னமும்?" என்று ரகசியமாகக் கேட்டாள் மனைவி.

"யாரு? முரளியா? சீக்கிரம் குளித்து விட்டு வரச் சொல். இனாம் வாங்க எல்லாரும் வர ஆரம்பித்து விடு வார்கள். வெற்றிலைப் பாக்கு, சந்தனம், பட்சணப் பொட்டலங்கள் எடுத்து வை" என்றார் அவர்.

"சரி, சம்பந்திகளுக்கும், பெண், மாப்பிள்ளைக்கும் கோடித்துணி கொடுக்க வாங்கோ உள்ளே" என்றாள் லக்ஷ்மி.

தாமோதரன் வந்து அவரவர்களுக்கும் புதிசுகளைக் கொடுத்தார். வசுவும், மாப்பிள்ளையும், முரளியும் அவரை நமஸ்கரித்தனர். லக்ஷ்மியும் புதுப்புடவை உடுத்தி விட்டாள். தாமோதரன் மட்டும் ஸ்நானம் செய்யவும் போகவில்லை, புதுசும் கட்டவில்லை.

"ஒருவழியாக விவரம் தெரிந்த பிறகு பொருளுக்கும் சேர்த்து ஸ்நானம் செய்வாராக இருக்கும்" என்று லக்ஷ்மி யாரிடமோ சொல்வது போல அவர் காதில் மட்டும் படும்படி சொன்னாள். தாமோதரன் செவிடு போல் தெருப்

பக்கம் போய் விட்டார். "வசு! முரளி; மாப்பிள்ளை, வாருங்களேன். ஊர் ஜனங்கள் எல்லாம் தெருவிலே கும்மாளமடிக்கிறார்கள். நீங்கள் மட்டும் உள்ளேயே ஏன் கிடக்கிறீர்கள்?" என்று உற்சாகமாக அழைத்தார்.

எல்லாரும் புத்தாடைகளுடன் தெருப்பக்கம் வந்து அமர்ந்தார்கள். தாமோதரனுக்கு ஏற்ற உற்சாகம் அவர்களிடம் தென்படவில்லை. தாமோதரன் தெருவில் மற்ற வீட்டுக் குழந்தைகள் சிலரைக் கூட்டியிருந்தார். அவர்களுடன் வேடிக்கையாகப் பேசிக் கொண்டு மத்தாப்புகளைப் பங்கீடு செய்து கொண்டிருந்தார்.

"விடிவதற்குள் கங்கா ஸ்நானம் செய்ய வேண் டாமா?" என்று லக்ஷ்மி நினைவு படுத்தினாள்.

தாமோதரன் பேசாமல் உள்ளே போனார். அவசர அவசரமாகத் தலையில் ஒரு கரண்டி முட்டை எண்ணெய்யை வைத்துத் தேய்த்து கொண்டே குளியலறையை நோக்கி நடந்தார். குளித்து விட்டு வந்து தன் புது வேஷ்டியை எடுத்து உடுத்திக்கொண்டார். அப்பொழுது பாபுவுக்காக வாங்கின சட்டையும் வேஷ்டி யும் பரிதாபமாக அங்கே கிடந்தன. அவர் அதைப் பார்க்க சகியாதவர் போல வேதனையுடன் எடுத்துக் கொண்டு முன் பக்கம் வந்து விட்டார். தெருவில் நாதசுரக்காரர்கள் வாசிக்க ஆரம்பித்தார்கள்.

"டேய், முரளி, வெற்றிலைப் பாக்கு எடுத்து வையடா" என்று உரக்கக் குரல் கொடுத்தார் தகப்பன். அவன் தன் அருகில் வந்ததும் தாழ்ந்த குரலில் "டேய், உன்னிடம் ஒரு ரூபாய் இருந்தால் அதில் வை" என்றார்.

முரளி தன் அப்பாவின் முகத்தை ஊடுருவி உன்னிய படியே ஒரு ரூபாய் நோட்டைத் தாம்பூலத்தில் வைத்து நாதசுரக்காரர்களிடம் கொடுத்து விட்டு வந்தான்.

"கங்கா ஸ்நானம் ஆயிற்றா?" என்று உரத்த குரலில் விசாரித்தபடியே தாமோதரனின் நண்பர் அங்கு வந்தார்.

"வாங்கோ..." என்று அழைத்தபடியே தாமோதரன் எழுந்து எதிர்கொண்டார்.

இவர்களைத் தாண்டி பாபு தன் கை டிபன் செட்டுடன் உள்ளே போனான்.

"தாமோதரன், உங்கள் பையனை இன்றைக்கே நிறுத்திக் கொண்டு விட்டேன். அவன் எங்கள் வீட்டுக்கு வரும் போது மணி பத்தடித்தா? இனியும் எதற்குத் தெருவில குறுக்கேயும் நெடுகவும் திரிவானேன் என்று என்னுடன் நிறுத்திக் கொண்டேன். ஆனால் அவன் தவித்து விட்டான். செலவு பணம் அவன் கிட்டே மாட்டிக் கொண்டு விட்டதாம்" என்று விளக்கினார் வந்தவர்.

"வாடா, பாபு. உன்னோடு எண்ணெய் தேய்த்துக் கொள்ளலாம் என்று காத்துப் பார்த்தேன்" என்றார் தாமோதரன்.

"கங்கா ஸ்நானமெல்லாம் முடிந்து விட்டது. நீங்க வாங்கியிருக்கும் புது டெரிலின் சட்டைக்காகத் தயாராக வந்து நிற்கிறான் பையன்" என்றார் நண்பர்.

"இந்தாடா, தயாராக வைத்துக் கொண்டு இருக்கிறேன் பாரேன்" என்றார் தாமோதரன்.

அவர் கொடுத்ததை வாங்கிக் கொண்டு, அணிந்து கொண்டு வந்து வணங்கினான் பாபு. அங்குள்ள பெரியவர்கள் யாவருக்கும் நமஸ்காரம் செய்தான்.

லக்ஷ்மி முரளியை அழைக்கவும் அவனும் கூடவே போய் உதவி செய்தான். எல்லாரும் பலகாரம் சாப்பிட அமர்ந்தார்கள். வேடிக்கையாகப் பேசிக் கொண்டே

எல்லோரும் இட்டிலியையும் பட்சணங்களையும் ருசித்தனர். பாபு மட்டும் மவுனமாகவே எதிலும் ஈடுபட்டான்.

அதற்குள் "கங்கா ஸ்நானம் ஆயிற்றா?" என்று கேட்டுக்கொண்டு வருகிறவர்கள் வர ஆரம்பித்து விட்டார்கள். தெருவில் இனாம் கேட்க வரும் கூட்டம் கூடி விட்டது.

தாமோதரனுக்கு உதவியாக முரளியும், பாபுவம் பம்பரமாகச் சுழன்றனர். லக்ஷ்மியும் வசுவும் அடுப்படியில் வேலையாக இருந்தனர். சம்பந்தியம்மாவும் அவர்களுடன் ஏதோ வேலையில் ஈடுபட்டிருந்தாள்.

பகல் விருந்து முடிந்ததும் சம்பந்தி தம்பதிகள் கிளம்பி விட்டார்கள். "உங்கள் மாப்பிள்ளை இங்கே இருக்கட்டும். அவனும் வசுவும் பிறகு வரட்டும். நாங்கள் போகிறோம்" என்று சொன்னார்கள்.

"பாபு, நீ என்னடா செய்யப் போகிறாய்?" என்று கேட்டார் அவன் மாமா.

"எனக்கு இந்த மாமா ஒரு வேலை வாங்கித் தந்திருக்கிறார். அவர் இன்றே அமாவாசையாக இருக்கிறது. நிறைந்த நாள். வந்து சேர்ந்து விடு என்கிறார்" என்றான் பாபு.

தாமோதரன் கண்களில் நீர் துளித்து விட்டது. பாபு நேராகத் தன் மாமாவின் காலில் விழுந்து எழுந்தான். பிறகு தாமோதரன் முன் நெடுசாண் கடையாக விழுந்து எழுந்து அவர் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

"ஏய், காலை விடுடா. இரும்பு பிடி பிடிக்கிறாய் நீ!" என்றார் அவர்.

"இல்லை, மாமா. உங்கள் பாதம் தான் எனக்கு ஆதாரம்" என்று கதறி அழுது விட்டான் பாபு.

"எழுந்திருடா, அசடு!" என்று சொல்லி அவனை எழுப்பினார்.

"மாமா, எல்லோரும் இருக்கும்போதே இதைச் சொல்ல வேண்டும் என்று எனக்கு எண்ணம். தவறு செய்துவிட்டேன், மாமா. தெரியாமல் எனக்கு உரிமை யில்லாத பணத்தை எடுத்து விட்டேன். அதற்கு நான் அனுபவித்த தண்டனை போதாதா? அரசு அளித்தது ஒரு தண்டனை- மூன்று மாதம் கடுங்காவல், என் மனம் அளித்தது ஆயுள் தண்டனை, மாமா. என் பிறப்பு வளர்ப்பையெல்லாம் ஆராய்ந்து, நான் செய்த குற்றத்துக்கு நான்பட்ட கழிவிரக்கம் விவரிக்க முடியாது. மீண்டும் விடுதலையடைந்து வந்ததும் உலகம் என்னைப் பார்த்த பார்வை!"

"நான் சின்னவனாக இருந்தபோது என் அம்மா சொல்லுவாள்... 'டேய், பாபு, பொய் புரட்டுக் கூடாதுடா. ஒரு தரம் 'பொய்யன்' என்று பெயர் வாங்கிவிட்டால் அப்புறம் உலகம் உன்னை உண்மை பேசவே விடாது' என்பாள். அது எவ்வளவு உண்மை என்று இப்பொழுது தான் புரிகிறது."

பாபு சற்று நின்றான். ஒருமுறை எல்லாரையும் பார்த்தான். அதில் கெஞ்சுதல் இல்லை, திமிர் இல்லை, கோபமில்லை. தெளிவாக, நிதானமாகப் பார்த்துவிட்டுத் தொடர்ந்து பேசினான்.

"மாமா, எங்கள் மாமா என்னை இங்கே வரும்படி சொன்னபோது மிகவும் தயங்கினேன். அன்பு என்பதைச் சிறிதளவாவது நான் எதிர்பார்க்கக் கூடிய மனிதன் அவர் ஒருவர்தான். அதனால் மறுக்க முடியாமல் வந்தேன்,

மாமா. இந்த வீட்டு மனிதர்கள், ஏன் என் மாமியுங் கூடத் தான் என்னிடம் பூரண நம்பிக்கை வைக்கப் பயந்தனர். அந்தச் சந்தர்ப்பத்தில் என்னிடம் பணத்தையும் கொடுத்து, பொறுப்பையும் தந்து எல்லோர் முன்னிலையிலும் என்னை ஒரு மனிதனாக மதித்தீர்கள். எனக்கே என்னிடம் சந்தேகம். ஆயின் உங்களுக்காக நீங்கள் அளித்த பொறுப்பைத் துணிந்து பெற்றேன். இன்றைய கங்கா ஸ்நானம் என்னைப் புது மனிதனாக்கி விட்டது. என் புது எஜமானரிடமும் என் கதை முழுவதும் கூறி விட்டேன். 'தாமோதரன் பொருக்கிய ஆள் வீண் போக மாட்டான்' என்று அவர் என்னைத் தட்டிக் கொடுத்தார். ராத்திரி முழுவதும் பணமும் பொருளும் வைத்துக் கொண்டு தங்க வைத்துவிட்டு, இன்று எப்படி என் வரவேற்பு இருக்கும் என்று பார்க்க அவரே வந்தார். நீங்கள் அளித்த சட்டையும் வேட்டியும் ஒருபுறம் இருக்கட்டும். எனக்கு என் தன்னம்பிக்கையைத் தந்தீர்களே? அதைவிட எனக்குப் பெரிய பரிசு யாரும் தரமுடியாது" என்றான் பாபு, உணர்ச்சிவசமாக.

எல்லோரும் பேசமுடியாமல் தவித்தனர். பாபுவின் மாமா அவனைத் தன் மார்போடு சேர்த்து அணைத்துக் கொண்டார். தன் கன்னத்தில் வழியும் நீரைத் துடைக்காமல் நின்றார்.

அந்தப் புனித நேரத்தை ஆசீர்வதிப்பது போல கோவிலில் காலைச் சந்தி மணி ஒலித்தது.

(எழுத்தாளன்– சிறப்பு மலர், 1973)

------------